உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

"ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானந்தரு வாணியை உள்நாடு"

| மலர் ௬ | ஸ்ரீமுக ஆண்டு சித்திரைத் திங்கள்<br>1933 ௵ ஏப்ரல் ௴ | இதழ் ௪ |
| --- | --- | --- |

## பாலருவாயர் பண்புகள்

[பத்திராசிரியர்]

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் மூன்று வயதில் தேவாரம் ஓதினாரென்றும், மெய்கண்டதேவ நாயனார் மூன்று வயதில் சிவஞானபோதம் உபதேசித்தாரென்றும் கூறும் சரித்திர வரலாறுகளைப் பலர் நம்புவதில்லை. மூன்றாம் வயதில் அத்தகைய அறிவு முதிர்ச்சியாவது அநுபவ மிகுதியாவது கைகூடாது என்று அன்னார் கருதுகின்றனர். இது மிகவும் பிழையான கருத்து. மேல்நாட்டில் பாலருவாயர் சிலர் செய்திகள் பால் போப்நோ என்ற ஆசிரியரால் திரட்டப்பட்டுள்ளன. அவற்றுள் சிலவற்றை நமது நாட்டினர் அறிந்துகொண்டால், நமது சமயகுரவர் சந்தான குரவர்களுள் முதன்மையில் வைத்து எண்ணப்படும் மேற்கூறிய பெரியார்களது வரலாறு உண்மை வரலாறே என்று நம்புவதற்கு வழியுண்டாகும் எனக் கருதி ஈண்டு சிலவற்றைத் தருகின்றோம். கீழே கூறப்படும் சாதாரணமான பாலருவாயர்களே பல அரிய செயல்கள் செய்துள்ளார்கள் எனில், பெற்றோர் தவமும், தமிழ் நாட்டின் தவமும், முற்பிறவித் தவமும் ஒன்று சேர்ந்து உருக்கொண்டெழுந்த வெங்குரு வேந்தனும் வெண்ணெய் வேந்தனும் திருவருள் கைவரப் பெற்று தோத்திர சாத்திரங்களை அருளிச் செய்தமையை யாரே மறுக்க வல்லார்? கீழே குறிக்கப்படும் விஷயங்கள் கீழ்வரும் நூலிலிருந்து எடுக்கப்பட்டுள்ளன. (Paul Popenoe's Practical Applications of Heredity—Published by the Williams & Wilkins Company at Baltimore, U. S. A., in 1930-Chapters I & II pages 1-32.)

ல்யூபெக் நகரிலிருந்த கிறிஸ்டியன் ஹெய்ன்ரிச் ஹெய்னெகென் (Christian Heinrich Heineken of Lubeck) என்ற குழந்தை தனது வயது 12 மாதமாக இருக்கும்பொழுதே விவிலியத்திலுள்ள பென்டட்யூச் (Pentatouch in the Old Testament) என்ற பகுதியிலுள்ள சிறந்த கதைகளை யெல்லாம் ஞாபகம் செய்துகொண்டது. 14-வது மாதத்தில் விவிலியத்தின் ஏனைய எல்லாப் பகுதிகளிலுமுள்ள கதைகளை யெல்லாம் தெரிந்துகொண்டது. 15-வது மாதத்தில் அரசன் சபைக்குச் சென்று "அரசே! தங்கள் திருக்கரத்தையும் ஆடையையும் முத்தமிட விடை தரவேண்டும்" என்று வேண்டிற்று. நான்காம் ஆண்டில் படிக்கவும், கூட்டல் கழித்தல் பெருக்கல் வகுத்தல் கணக்கு சொல்லவும் அக்குழந்தைக்குத் தெரியும். பிரெஞ்சு பாஷையும், லத்தின் பாஷையில் 1500 பழமொழிகளும், ஜெர்மன் பாஷையும், ஐரோப்பாவிலுள்ள முக்கியமான நகரங்களின் சரித்திரம், தொழில், ஜனத்தொகை முதலிய குறிப்புகளும் அவ்வயதிலேயே அந்தக் குழந்தைக்குத் தெரியும். ஆனால் அடிக்கடி நோய்வாய்ப்பட்டிருந்தமையால் அந்தக் குழந்தை 4 ஆண்டு 4 மாதம் வயது முடிந்தவுடன் இறந்துவிட்டது.

ரக்பியைச் சேர்ந்த தாமஸ் ஆர்னல்ட் (Thomas Arnold of Rugby) என்பவர் பிறந்த இருபத்து நான்கு மாதங்களுக்குள் பெற்ற அதிதீவிர அறிவைக் கண்டு அதிசயித்து அவர் தந்தையார் அக் குழந்தையின் மூன்றுவது பிறந்த நாட்கொண்டாட்டத்தில் (அதாவது மூன்றும் வயதின் தொடக்கத்தில்) 24 காண்டங்களாகப் பதிக்கப்பட்ட டொபையாஸ் ஸ்மோலெட்டவர்களது இங்கிலாந்து தேச சரித்திர புத்தகத்தைப் பரிசாக அளித்தார். (Tobias Smollett's History of England in 24 volumes.)

மார்தா எஸ் என்ற பெண் குழந்தை தனது வயது 20 மாதமாக இருந்தபோது படிக்கக் கற்றுக் கொண்டு இரண்டாவது ஆண்டின் நிறைவில் சாதாரணமாகப் படிக்கவும் இருநூறு சொற்களை உபயோகிக்கவும் தெரிந்துகொண்டது. (She had a reading vocabulary of 200 words.)

பெட்டி போர்ட் (Betty Ford) என்ற பெண் குழந்தை மூன்றுவது வயதில் பஞ்ச தந்திரக் கதைகள் போன்ற புதிய கதைகளைச் சிருஷ்டிக்கவும் இறுதி எதுகையுள்ள (Rhyming jingles) துண்டுப்பாடல்களைப் பாடவும், டைப்ரைடர் மிஷினை உபயோகித்து டைப் அடிக்கவும் தெரிந்து கொண்டாள். எட்டாவது வயதில் 13000 சொற்களை உபயோகிக்கவும், கதைகள், கவிகள் முதலியவற்றை சர்வகலாசாலை மாணவரைப் போலவே திறம்பட எழுதவும் தெரிந்து கொண்டாள்.

ஜான் ஸ்டுவர்ட்மில் என்ற ஆங்கிலப் பொருளாதாரப் பேராசிரியர் (John Stuart Mill, the English Economist) மூன்றுவயதில் கிரீக் பாஷை படிக்கவும், ஏழுவயதில் ப்ளேடோவின் தத்துவ நூலாராய்ச்சியை அறியவும், ஒன்பது வயதில் கானிக் செக்ஷன்களைக் கணக்கிடவும் (Conic sections, subject for B. A. Mathematics) சக்தியுடையவராய்

விளங்கினர். அவர் "உரிமை" (Liberty) என்பதைப்பற்றி எழுதியுள்ள நூல் ஆங்கில மொழியுள்ள வரையில் இறவாது விளங்கும்.

ஜெரெமி பென்தம் (Jeremy Bentham) தனது மூன்றேகால் வயதில் ஒருநாள் தாய்தந்தையரோடு உலாவப் போக, தாய்தந்தையர் சில சிநேகிதர்களோடு நடத்திய சம்பாஷணை தனது கருத்துக்கு இசைந்த பொருள்களைப் பற்றியின்றி வேறு ஏதேதோ பொருள்கள் பற்றி இருந்த படியால், அவர்களிடம் சொல்லாமலே வீட்டுக்கு ஓடிவந்து தன்னால் தூக்க முடியாத ரேபின்ஸ் ஆங்கில தேச சரித்திர நூலைத் தூக்கி (Rapin's History of England) வைக்கும்படி வேலையாளுக்குக் கட்டளையிட்டு, வேலையாள் வைத்தவுடன் ஒன்றிய மனதோடு அந்நூலைப் படித்துக்கொண்டிருந்ததைப் பெற்றோர் கண்டு மிக மகிழ்ந்தனர். இவர் நான்காம் வயதில் லத்தீன் பாஷையிலும் ஐந்தாமாண்டில் கிரீக் பாஷையிலும் கட்டுரைகள் எழுதும் ஆற்றல் பெற்றார். பத்து வயதில் ஆக்ஸ்போர்ட் பல்கலைக்கழகம் சேரச்சித்தமாயிருந்தார். ஆங்கிலேயருள் பெரிய (Eminent jurist) சட்ட சாத்திர நிபுணராகப் பிற்காலத்தில் விளங்கினர். மக்காலே, பாஸ்கல், கதே, க்ரோஷியஸ், கால்டன் (Macaulay, Pascal, Goethe, Grotius, Galton) முதலிய பேரறிஞர் பலர் சரித்திரங்களிலும் இத்தகைய குறிப்புகள் பலவற்றைக் காணலாம்.

பள்ளிக்கூடங்களில் கற்பிக்கப்படும் பாடமுறை இருப்புச் சட்டத்துள் அடைத்த உயிரற்ற முறையாயிருத்தலால் (Ironclad lifeless School system) பல பேரறிஞர்கள் பள்ளிக்கூடத்தில் முட்டாள் பிள்ளைகள் என்று பெயரெடுத்தார்கள்; ஆனால் பிற்காலத்தில் உலகம் போற்றும் பேரறிஞர்களாகப் போற்றப் பட்டார்கள். உதாரணங்களாக டார்வின், ஜான்ஸன், எடிஸன், வொர்ட்ஸ்வொர்த், க்ளாட்ஸ்டன், லூதர் (Darwin, Johnson, Edison, Wordsworth, Gladstone, Luther) முதலிய பேரறிஞர்களைப் பள்ளிக்கூடத்தில் அவர்கள் உபாத்தியாயர்கள் உதவியற்ற கடைத்தர மாணவர்களாகவே எண்ணினர்கள்.

மேற்கூறிய வரலாறுகளி லிருந்தாவது நமது நாட்டினர் திருஞானசம்பந்தரும் மெய்கண்ட தேவரும் மூன்றுமாண்டில் தேவாரத்தையும் சிவஞான போதத்தையும் பாடியிருத்தல் கூடுமென்று நம்புவார்களென்று எதிர்பார்க்கிறோம்.



# மநுநீதிச் சோழன்

[தி. கு. கி. நாராயணசாமி, திருச்சிற்றம்பல இல்லம்]

இற்றை நாள்வரை நமக்குக் கிடைத்துள்ள மநுசரித்திரம் மூன்று. அவை பெரும்பாலார் கொண்ட காலமுறையில் விக்ரம சோழனது ஐந்தாவது ஆண்டில் (1123) மநுவின் வழிவந்த பாலையூர் உடையான் சந்திரசேகர ஆதி விடங்கன் திருவாரூர்த் தியாகர் கோயில் இரண்டாம் சுற்று வடசுவரில் செதுக்கியது (௧); சேக்கிழார் (1133-1145) திருத்தொண்டர் புராணத்து வந்த சரிதை (௨); வடலூர் இராமலிங்க அடிகள் (1823-1874) அருளிய மநுமுறை கண்ட வாசகம் (௩) இவற்றில் நடுவணதின் ஆசிரியர் சிவமணம் கமழவும் பத்திச்சுவை சொட்டவும் பழங்கதைகள் சொல்வதிலோர் புதுமை நயம் பயக்கவும் கொண்ட குறிக்கோள் விரவவும் எழுதும் திறலுடையராதலின் முன்னது இரண்டின் கதைப்போக்கை ஒட்டி எடுத்து ஆராய்வாம்.

(௧) கல்வெட்டு வருமாறு:—

(3) * * * †ஸ்ரீ விக்ரமசோழ தேவர்க்கு யாண்டு ஐஞ்சாவது மிதுன ஞாயிற்று பூர்வபக்ஷத்து ஸப்தமியும் ஞாயிற்றுக்கிழமையும் அத்தமுமான நாள் முன்னூற்று நாற்பதினால் கெயமாணிக்க வளநாட்டு, திருவாரூர் கூற்றத்து திருவாரூர் உடையார் வீதி விடங்கர் சித்திரை திங்கள் திருநாளில் சதைய * * * * * தேவர் ஸ்ரீ * * * * திருக்காவணத்தில் ஸிம்ஹாஸநத்து எழுந்தருளி இருந்து பதியிலாளர் தியாகவிநோதத‡ * * * *ங்கண்டருளா நிற்ப ஸ்ரீ காரியம் சுப்பிர (4) மங்கலமுடையான் மாதவன் இரவியான மாகாலைய மூவேந்த வேளார் விண்ணப்பத்தினால் பதிபாத மூலப் பட்டுடை பஞ்சாசாரிய தேவ கன்மிகளுக்கும் கோயில் * * * * யார்க்கும் திருவாய் மொழிந்தருளினபடி நம் எவலால் பூலோக ராஜ்யஞ் செ[ய்]கிற சூர்ய புத்ரன் மநு, தன் புத்ரன் ஏறிவருகிற தேரில் பசுவின் கன்றகப்பட்டு ப்ரமாதப்பட அதின் மாதாவான சுரபி கண்டு துக்கித்து மநுவின் வாசலில் மணியை யெறிய அது கேட்டு மநு தன் மந்திரி இங்கணாட்டு பாலையூருடையான் உபயகுலாமலனைப் பார்த்து நீ சென்று இதனை அறிந்து§ * * * ‘வாயிற்ப்புறத்து ஒரு பசு மணி எறியா நின்றது’ என்று சொல்ல அது கேட்டு, மநு புறப்பட்டு பசுவையும் பட்டுக் கிடந்த|| * * * படி வினவி, தன் புத்ரன் ஏறின தேரிலே (5) பட்டமை அறிந்து அக்கன்றுக்கு நேராகத் தன் புத்ரன் பிரிய விருத்தனை தேரிலே ஊர்ந்து குடுக்கவென்று உபயகுலாமலனுக்குச் சொல்ல அவன் ஸந்தாபத்தோடும் புறப்பட்டு தன் செவிகளைத் தரையிலே குடைந்து கொடுபட்டது கண்டு துவாரபாலகன் புகுந்து உபயகுலாமலன் தன் செவிகளை குடைந்து கொண்டு¶ * * * துக்கிதனுய, மநு தானே புறப்பட்டு தன் புத்ரனை தானே தேரிலே ஊர்ந்து குடுக்க, அப்

---

† பூமாலை மிடைந்த என்ற மெய்க்கீர்த்தி முன் உடையது. (No. 456 of Vol. V of. S. I. I.) உத்தேச பதங்கள். ‡ தியாக விநோதத்தாள் நடங்.

§ வாவென. || கன்றும் கிடந்தபடி. ¶ இறந்தான் என்று சொல்ல அரசன்.

போதே நாம் அவனை அநுக்ரகித்து கன்றுக்கும் மந்திரிக்கும் மநு புத்ரனுக்கும் ஜீவன் குடுக்க அது கண்டு மநு சந்தோஷித்து கன்றினை எடுத்து[க்] கொண்டு பசுவுக்கு காட்டிக்குடு† * * * அபிஷேகம் பண்ணி இவனுக்கு உபய குலாமலன் மகன் சூரியனை மந்திரியாக்கி இவனுக்கு தன் புத்ரன் மாளிகை‡ * * * குடுத்து மநுவும் உபயகுலாமலனும் தபசினை தலை நின்றமையில் பாலையூர் உடையான் (6) உபயகுலாமலன் வம்சத்தானுகிய பாலையூர் உடையார் சந்திரசேகரன் ஆதி விடங்கனுன குலோத்துங்க சோழ மஹாபலிவான * * * வம்சாதியாக வருகிற மாளிகை மனை பழையபடி மாளிகையாக எடுத்து குடிவைப்பிப்பதாக நாம் சொல்ல * * * இதிலே நித்தமும் நம்மடியார்க்கு சோறு இடப்பெற வேணுமென்று இவன் நமக்கு சொன்னமையில் காட்டி பெறுவதாகவும்.

பெரியபுராணக் கதைப்போக்கின் சுருக்கம் வருமாறு:—

தண்புனல் நாட்டில் தொன்மை மிக்க திருவாரூர் திருநகர் (மலர்மகட்கு வண்டாமரை போன்ற) மாமலராள் வழிபட்டது. அதன் மாடமாளிகை கூடகோபுர மெங்கும் வேதகீத, தோத்திர ஓசையும், நால்வகைத் தானையின் ஒலியும் நிரம்பின. அங்கு தாமதோரணம் சூழ்ந்த ஆவண வீதிகளும் அறவோர் துறவோர் உறையுளும் உள. இன்ன பிறசிறப்பு வாய்ந்த இந்நகர் அரசன் அநபாயன் வழிமுதல்வனுன மநுகதிரோன் வழித் தோன்றியவன்; உயிர்கட் கெல்லாம் கண்ணும் ஆவியுமாம் பெருங்காவலன். வேள்விகள் எண்ணிலாதன மாணவியற்றியவன்; பெற்ற நீதியுந்தன் பெயர் ஆக்கியவன்.

இவன் அறம் புரிந்து, மறம்கடிந்து, அறநெறி வழாமல் வையம் காக்கும் நாளில் இவனுக்குச் சிறந்த நற்றவத்தால் உலகம் போற்ற பேரிக் குருளையன்ன மைந்தன் பிறந்தான். இத்தனி இளங்குமரன் சிவ முயன்றடையும் தெய்வக் கலைபலத் திருந்தவோதி, படைத்தொழில்கள் கற்று, தந்தை உளம் மகிழ ஓங்கிய குணத்தால் சிறந்து, வளரிளம் பரிதிபோன்று வாழ்ந்தான். அந்நாளில் இளங்குமரன் ஒருநாள் கொற்றவன் கோயினின்று தேர் மிசை தானை சூழ பொலிந்து போகையில் இளங்கன்று அம்மறுகினூடே துள்ளிப் போந்து தேர்க்கால் மீது விசையினுல் செல்லப்பட்டு விண்ணுலகடைய, அதன் தாய் அலமந்தோடி விம்மி, அலறி, சோர்ந்து, மெய்நடுக்குற்று வீழ்ந்தது. அது கண்ட மைந்தன், வந்தது இங்கு அபாயம் என்று சொல் தடுமாறி நெஞ்சில் துயர் உழந்து அறிவழிந்து, 'என் உணர்வெனும் பெருமை மாள பெற்றமும் கன்றும் உயிர்துறந்தமைக்கு என்செய்வேன்' என்று தேரினின்று இழிந்து வீழ்ந்தான். அலறுகிற பேராவை நோக்கி அவனுருயிர் பதைத்து, நிலமிசை கிடந்த கன்றை நோக்கி நெடிதுயிர்த்திரங்கி, 'மலர்தலை உலகம் காக்கும் என் கோமானுக்குப் பழிவந்தெய்தப் பிறந்தேன்; வந்த இப்பழியை மாற்றும் வகையினை என் தந்தை அறியா முன்னம் மறையவர் முன்சென்று விதித்தவாறு ஆற்றுவேன்' என்றுன்.

---

† குடுத்து புத்ரனுக்கு பட்டாபிஷேகம். ‡ மாளிகையும்.

இது நிற்க, மன்னுயிர் காக்கும் செங்கோன் மநுவின் பொற்கோயில் வாயிற் றூக்கிய மணியை பசுசென்று கோட்டினால் புடைக்க, அதன் ஆர்ப்பு கேட்ட மன்னன் அறிவினையிழந்து வாயில் நண்ண, காவலர், 'இறைவ! பசுவந்தெய்தி நின்கொற்ற வாயிற் றூங்கிய மணியைக் கோட்டால் துளக்கியது' என்றனர். அதுகேட்ட மன்னன் பசுவை நோக்கி 'இதற்கு உற்றதென்' என்று அமைச்சரை இகழ்ந்து நோக்க, முதிர்ந்த கேள்வியும் தொன்னெறியுமுடைய அமைச்சன் மன்னன் தாளினைத்தொழுது 'வளவ! நின் புதல்வன் தானைசூழ ஆங்கோர் தேர்மேலேறித் தெருவில் போங்கால் இளைய ஆன் கன்று தேர்க் காலிடைப் புகுந்து இறந்ததினால் தளர்வுற்ற இத்தாய் இத்தன்மை விளைவித்தது' என்றான். அவ்வுரைகேட்ட வேந்தன் ஆவுறு துயரமெய்தி வெவ்விடம் தலைக்கொண்டார் போல் வேதனை அடைந்தான்.

அது கண்ட மந்திரிகள் சிந்தை தளர்வது இதற்குத் தீர்வன்று, மைந்தனை முன்கோவதை செய்தார்க்கு அந்தணர் விதித்த முறை வழி நிறுத்தல் அறம்' என, வேந்தன், கன்றை இழந்தலறும் கோவுற்ற நோய்க்கு இது மருந்தாமோ? நான் மைந்தனை இழக்கின்றேன் என்று எல்லீரும் சொல்லிய இச்சழக்குக்கு நான் இசைந்தால் தருமம் சலியாதோ? என்று இகழ்ந்துரைக்க எதிர் நின்ற மதியமைச்சர், தொந்நிலம் காவலவ! மறை மொழிந்த அறம் புரிதல் தொன்று தொட்ட நெறியன்றோ? என 'விறல்வேந்தன் முகம் செயிர்த்து' நீர் சிந்தைசெய்யாது உரைக்கின்றீர்; இவ்வுலகில் எப்பெற்றம் இப் பெற்றித்தாய இடரால் உயிர்த்துக் கதறி மணியெறிந்து விழுந்தது-விளம்பீர்? ஆவுற்ற பேரிடர்யானும் தாங்குவதே கருமம், என அமைச்சர் அஞ்சி அகன்றனர். மன்னவன் மைந்தனையழைத்து மந்திரிதனை 'முன் இவனை அவ்வீதியில் முறன் தேர்க்காலில் ஊர்க' என, அன்னவனும் அது செய்யாது அகன்று தன் அருயிர் துறப்ப, அரசன் ஒரு மைந்தன் தன் குலத்திற்கு உள்ளான் என்பது உணராமல் தர்மவழி செல்கை கடனென்று தன்மைந்தனைத் தேராழியுற ஊர்ந்தான். இச்செயல் கண்டு தரியாத வானவர் பூமாரி பொழிய, வீதிவிடங்கர் மழவிடைமேல் காட்சி அருள, அரசன் கண்டு போற்றிசைப்ப, பெருமானும் வேந்தருக்கு அருள் கொடுத்தார். இந்நிலையில் உயிர்துறந்த ஆன்கன்றும் அரசன் உரிமைத் தனிக்கன்றும் மந்திரியும் உடன் எழுந்தனர். பின் அடிபணிந்த திருமகனை அரசன் ஆகமுற எடுத்தணைந்து அருந்துயரம் நீங்கினான். மடிசுரந்து பொழியும் தீம்பாலை கன்று உண்ண பசுவும் துயரம் நீங்கியது. இவ்வகை மநுவுக்கு வீதியிலே அருள் கொடுத்த கருணைத்திறத்தை ஏழுலகும் எடுத்தேத்தும்.

இவை இரண்டிற்கு முள்ள வேறுபாடுகள் சரித்திர நிகழ்முறையில் பல. (1) மணி ஓசைகேட்டு மநுதானே வாயில் நண்ணினான் எனச் சேக்கிழார் அருளிய விடத்து, கல்வெட்டு மந்திரியை ஏவி அறிந்ததாக மந்திரியின் பெயருடன் கூறுகிறது. (2) சேக்கிழார் மந்திரி இறந்த விதத்தைக் கூறவில்லை. ஆனால் கல்வெட்டு செவிகளைத் தரையிலே குடைந்து கொடு பட்டதும் அதனை துவாரபாலகன் அரசனுக்கு அறிவித்ததாகவும் கூறுகிறது.

(3) மந்திரிக்கும் அரசனுக்கும் கோவதை குறித்த விதிவிலக்குச் சங்கைப்பற்றிய விவாதம் சேக்கிழார் கூறுவதை கல்வெட்டு கூறவில்லை. ஈண்டு சேக்கிழார் 'மெய்மநு' என்ற தொடர்க்கு பல்வகையிலும் உயர்வு காட்டுவது சிந்திக்க உரியது. (4) உயிர் பெற்றெழுந்த பின்னர் மநுவும் மந்திரியும் தவநிலை நின்றதாகவும், மகனுக்குப் பட்டம் கட்டியதாகவும், மந்திரிமகன் சூரியனை மந்திரி யாக்கி இளவரசன் இல்லத்தை அளித்தமை கல்வெட்டு மட்டும் கூறுகிறது.

இவற்ருல் இக்கல்வெட்டு மந்திரி வழிவந்தவர் செதுக்கியதால் மந்திரிக்குத் தக்க இடத்தில் ஏற்றம் படைத்தும், அவன்முறை வருமிடத்து விரித்தும், அவனையும் அவன் குடிவழி பெற்ற பெற்றியையும் விரித்துப் புனைந்தும் உரைத்ததைக் கதையால் காண்க.

# திருவாசகத்தேன்

[அ. மு. இராம சுப்பிரமணியன் செட்டியார், கோநகர்.]

திருமுறை பன்னிரண்டனுள், எட்டாவதாக விளங்கும் திருவாசகத்தைத், தேனெனக் கூறுவர் ஆன்றோர். திருவாசகத்தைத் தேனுக்கொப்பிடுத லெவ்வாறு பொருந்துமெனின்: தேன், பூக்களிலிருந் துண்டாவது. திருவாசகத்தேன், வாதவூரிலரும்பி, மதுரையிற் போதாகிப், பெருந்துறையில் மலர்ந்த மலராகிய மணிவாசகரது நாவினின்றுந் தோன்றியது. மலர்த்தேனை, ஊனக் கண்ணாற் காணலாம்; திருவாசகத் தேனை, ஞானக்கண்ணால்-சமயக்கண்ணா லறியலாம். மலர்த்தேன், ஐம்புலன்களுள் நாவுக்குமட்டும் இன்ப மளிக்கும்; திருவாசகத் தேன் சரீரமுழுதுக்கும் இன்பமளிக்கும். தேனின் சுவையறிய, நாக்குக்கு உருசி யறியும் உணர்வு வேண்டும்; திருவாசகத் தேனின் உருசியறியச் சமய அறிவுவேண்டும். வியாதியுள்ளோர் மலர்த்தேனை அருந்துவதினால் வியாதி நீங்கப் பெறுவர்; திருவாசகத்தேனை அருந்துவோர் பிறப்பு, இறப்பு என்னும் நோய்களினின்று நீங்கிப் பேரின்பமென்னும் அழியாப்பேறு பெறுவர். சூரிய வொளியால் மலர்ந்த மலர்களினின்றே தேன் வெளிவரும்; "மலர்தலை யுலகத்து மல்கிரு ளகல, யிலகொளி பரப்பி யாவையும் விளக்கும் பரிதியி னொருதா னாகி முதலீ, றொப்பளவாசை முனிவிக ந்துயர்ந்த, அற்புதமூர்த்தி" யினருட் கதிர்கள் வீசப் பெற்ற மலராகிய, மணிவாசகர் திருவாயினின்றும் வெளிவந்ததே திருவாசகத்தேன். இதனாலன்றோ,

"தொல்லை யிரும்பிறவிச் சூழுந் தளைநீக்கி
அல்லலறுத் தானந்த மாக்கியதே—எல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூ ரெங்கோன்
திருவா சகமென்னுந் தேன்"

என்றருளின ரான்றோர்.

இத்திருவாசகத் தேன், மணிவாசகத்தே நீ எங்கே கண்டது? உலக முதல்வராம் உமை மணவாளர் திருவடியில் இத்தேனீ, தன்னுடைய சிந்தனையை இறைவனிடத்துச் செலுத்தியது; விழிகளை, அவ்விறைவன் திருப்பாதங்களிற் செலுத்தியது; அதன்றா அத்திருவடிகளையே வந்தித்தது; இறைவனைப் பாடும் பணியையே அரும்பெருந் திருப்பணியாகக் கொண்டது. அது காலை, அவ்விறைவனின் திருப்பாதப் போதுகளினின்றும் திருவாசகத் தேன் பிலிற்றியது. அத்தேனை, ஊனுருக, உயிருருக, மனத்துள் விளங்கும் ஒளி பெருக மணிவாசகத் தேனீ சேகரித்தது. அத்தேனை, உலகோர்க் குபகாரமாகுமாறு வெளிவிடுத்த பெரியோன் யார்? வேதம் மொழிந்த விமலனன்றோ! கனவினுங் காணவொண்ணாக் கடவுள், மானிட வுருக்கொண்டு பூமியில் வந்து, மணிவாசகத்தை யெழுதித் திருச்சிற்றம்பலப்படிகளில் வைத்துவிட்டு மறைந்தருளினரெனில், இதன் பெருமை யாரால் அளவிடற்பாலது! வேதத்திலுஞ் சிறப்புடையது திருவாசகமானதா லன்றோ,

> " விளங்கிழை பகிர்ந்த மெய்யுடைய முக்கட்
> காரண னுரையெனும் ஆரண மொழியோ
> ஆதிசீர் பரவும் வாதவூ ரண்ணல்
> மலர்வாய்ப் பிறந்த வாசகத் தேனோ
> யாதோ சிறந்த தென்குவி ராயின்
> வேத மோதின் விழிநீர் பெருக்கி
> நெஞ்சநெக் குருகி நிற்பவர் காண்கிலேம்
> திருவா சகமிங் கொருகா லோதிற்
> கருங்கல் மனமுங் கரைந்துகக் கண்கள்
> தொடுமணற் கேணியிற் சுரந்துநீர் பாய
> மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப் பெய்தி
> அன்ப ராகுந ரன்றி
> மன்பதை யுலகில் மற்றைய ரிலரே "

என அருளினர் தவப்பிரகாசராம் சிவப்பிரகாசர். இங்கும், "வாதவூரண்ணல் மலர்வாய்ப் பிறந்தவாசகத் தேனோ" எனத் தேனெனவே குறிக்கின்றார். நெக்கு நெக்கு நினைப்பவர் நெஞ்சுளே புக்கு நிற்கும் பொன்னார் சடைப் புண்ணியனைக் காணத் திருவாசகம் ஒரு சிறந்த கருவியாகும். நெஞ்சநெக் குருக்குந் தன்மை, திருவாசகத்தில் மிகுந்துள்ள தென்பதை, "திருவாசகத்திற்குருகாதார் ஒருவாசகத்திலும் உருகார்" என்னும் பழமொழி வலியுறுத்தும். இதனாலன்றோ, "வாட்டமிலா மாணிக்கவாசக!நின் வாசகத்தைக், கேட்டபொழு தங்கிருந்த கீழ்ப் பறவைச் சாதிகளும், வேட்டமுறும் பொல்லா விலங்குகளும் மெய்ஞ்ஞான, நாட்டமுறுமென்னில் இங்கு நானடைதல் வியப்பன்றே" என்றனர் திருவருட்பிரகாசர்.

அஃறிணைப்பொருள்களும் உருகும் அருட்டிறம் வாய்ந்த திருவாசகத்தை, ஆறறிவு படைத்த மக்கள் இகழ்ந்து புறக்கணிக்கின்றனரே! அந்தோ! திருவாசகம்: என்ற சொல்லிலேயே எத்துணைத்தேன் சொட்டுகின்றது! மணிவாசகனாகிய மேகம் பொழிந்த திருவாசக மெனும் பெருநீர், படிப்பவரது, மன

மெனுங் குளத்திற் சென்று, நாவெனும் மதகினடக்து, கேட்போரின் செவி யெனும் மடையிற் சென்று, மனமெனும்:நிலத்திற்பாய்ந்து, ஆங்குள்ள அன் பெனும் விதையினின்றுஞ் சிவமெனும் பயிரை உண்டாக்கி வளர்த்து, அருள்பூத்து முத்தியென்னுந் தானியத்தை யளிக்குமே. "புல்லாகிப் * * பூடாய்ப் புழுவாய் மரமாகிப் பல்விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக், கல் லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய், வல்லசுராகி முனிவராய்த் தேவராய்ச், செல்லா நின்ற இத்தாவர சங்கமத்துள், எல்லாப் பிறப்பும்" பிறந்திறந்துழலும் நமக்கு, அது அருமருந்தாகி அல்லற் பிறவியை யழித் துப் பேரின்பத்தைக் கொடுக்குமே. முற்காலத்தில், நம் முன்னோர், இத் தேனைத் தெளிவுபெற உண்டனர். அத்தேனுணவால் எக்காலமும் இன்பமய மாயிருந்தனர். ஆனால் அவர்களின் வழிவந்த நாமோ, முன்னோர் மூடர், அவர் ஒழுகிய முறையில் நாமொழுகுவது பேதைமை" என்றின்னோ ரன்ன அறியாமையிலமுந்திக் கிடக்கின்றோம். அன்பர்களே! கேட்கவும், படிக்கவும், ஆராயவும் எற்ற தேனனைய இத்தெய்வத் தண்டமிழ் நூலிருக் கப், புதைய லெடுத்தான தனைப் புறக்கணிப்பதே போல, போற்று தொழிவ தோடமையாது புறக்கணிப்பது நன்றாகுமா? இத்தேன், எந்நாட்டவர்க் கும், எச் சமயத்தவர்க்கும், எந்நிலையிலுள்ளார்க்கும், இளைஞர்க்கும், முதி யோர்க்கும், பெண்களுக்கும் தெவிட்டாத தெள்ளமுதென இனிப்பது. தமிழ்நாட்டிற் பிறந்த நாம் இத்தேனைப் பருக ஒருப்படவில்லை. ஆனால், பல ஆயிரக்கணக்கான மைல்களுக் கப்பாலிருந்து வந்த ரெவரண்டு போப் என்ற ஆங்கிலேயர், இத்தேனனைய திருவாசகத்தைத் தம்மொழியில் பெயர்த்து எழுதி, அதன் சுவையை ஆங்கில நாட்டவரெல்லாம் அருந்துமாறு செய் துள்ளார்.

அன்பர்களே! இத்தகைய தெய்வத் திருவாசகத்தேன், தமிழரில்லங்கள் தோறும் விளங்கி வெளிப்பட முயற்சி செய்யுங்கள். எழுமின்! விழிமின்! கருதிய கருமம் கைகூடும்வரை உழைமின்! என்ற பெரியாரின் வாக்கைக் கடைப் பிடியுங்கள்.



# குருவுக்கும் மாணவனுக்கும் சம்பாஷணை

[R. M. அண்ணாமலை செட்டியார்]

**மா**ணவன் :—அறிவாற் சிறந்த ஐயா, நாம் எல்லோரும் "நான்," "நான்" என்று சொல்கிறோம். அவ்வாறு "நான்" என்று சொல்கிற பொருளேது?

குரு :—அன்பனே! அவ்வாறு "நான்" என்று சொல்வது ஆன்மா.

மா :—ஆன்மாவுக்கு வேறு பெயர்களும் உளவோ?

குரு :—ஆம். பசு, உயிர், சேதனன், புற்கலன், சீவன், அணு, வியாப கன் என்பனவாம்.

மா :—தாங்கள் கூறிய ஆன்மா என்னும் பொருள் கண்ணுக்குப் புல னாகவில்லை. ஆனால் கண்ணுக்குப் புலனாவது இவ்வுடலேயாகும். அன்றியும்

அறிவு உடம்பின் கண்ணன்றி வேறு நிகழக் காணுமையாலும் நான் பெரியவன், நான் சிறியவன், நான் சிவந்தவன் என உடம்பினையே நானென்று யாவரும் வழங்கக் காண்டலாலும் இவ்வுடலையே ஆன்மா வென்றால் என்னை?

குரு :—அறியாது கூறினுய்; கண்ணுக்குப் புலனுகாமைகொண்டு ஒரு பொருளை இல்லையென்றல் அடாது. என்னை? நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் என்னும் பூதங்கள் ஐந்தனுள் காற்றும் ஆகாயமும் கண்ணுக்குப் புலனுவதில்லை. அதுகொண்டு காற்றையும் ஆகாயத்தையும் இல்லையென்பார் ஒருவருமில்லை. அதுபோல, கண்ணுக்குப் புலனுகாமைகொண்டு ஆன்மாவை இல்லையென்றல் பொருந்தாது. அன்றியும் நான் பருத்தேன் நான் சிறுத்தேன் என உடம்பின் குண விசேடங்களை உபசாரத்தால் ஆன்மாவிற்கேற்றி வழங்கின காலத்தும் யான் உடம்பு, யான்கை, யான்கால் என உடம்பை யான் என எவரும் வழங்காது, என் வீடு, என் பொருள், என் மனைவி என்றாற்போல, என் உடம்பு, என் கை, என் கால் என வேற்றுமைப்படவே யாவரும் வழங்கக்காண்டலாலும், அவ்வாறு வழங்கும் பொருள் உடம்பிற்கு வேருதல் பெறப்படுதலால், அதுவே ஆன்மாவாதல் அமையும். அன்றியும் அறிவு உடம்பின்கண்ணன்றி வேறு நிகழக் காணவில்லையெனக் கூறியதில் ஒரு கருவியும் குறையாது கிடந்த பிணக்கிடையில் அறிவு நிகழாமைக்குக் காரணமென்னை? உடம்பே அறியும் பக்ஷத்தில் அப்போது அறிவு நிகழ்தல் வேண்டுமே. அதனிடத்து அப்போது அறிவில்லையாகையால் அது நிகழவில்லையென்பதே தேற்றமாம். ஆகவே, அவ்வறிவே ஆன்மாவாதல் அமையுமன்றி உடம்பு அறியுந் தன்மை யுடையதென்பது பொருந்தாது.

மா :—அற்றன்று; நிலம், நீர், தீ, வளியாகிய நான்கு பூதங்களினுல் ஆகியது இச்சரீரமாகும். பூதங்கள் சடமாக இருப்பினும் அவை தம்முள் ஒன்ருய்க் கூடியகாலத்து அக்கூட்டுறவின் கண்ணே முன்னர் இல்லதோர் அறிவு புதிதாய் உண்டாகும். அது எதுபோலுமெனின், பாக்கும் வெற்றிலையும் சுண்ணமும் தம்முள் ஒன்று சேர்ந்த காலத்து முன்னர் இல்லதோர் சிவப்பு நிறம் புதிதாய்த் தோன்றுவதை யொக்குமென்க. ஆதலால் சரீரத்தில் வேருக ஆன்மா உண்டெனல் பொருந்தாது.

குரு :—நன்று சொன்னுய்! பூதங்கள் உண்மையிற் சடமாதலால் அவை தம்முள் கூடிய காலத்துப் புதிதாய்ச் சேதனத் தன்மை உண்டாயிற்றென்பது ஒருவாற்ருனும் இசையாது. அன்றியும் சடத்தன்மையே இயற்கையாய் அமைந்துள்ள பூதங்கள் தம்முள் கூடிய காலத்தும் சடத்தன்மை மாறி சேதனத் தன்மை யடைந்ததென்னல் இயற்கை விரோதமுமாம். அன்றியும், அவ்வித சேர்க்கையாலாகிய சரீரம், நித்திரை யடைந்த காலத்து சேதனம் பிரகாசியாதிருந்ததென்னை? அப்போது சேதனத் தன்மைமாறி சடத்தன்மையாயிற்ரு? பின்னர் விழித்த காலத்து சடத்தன்மை மாறி சேதனத் தன்மை யெய்திற்ரு? இனிப் பூதங்கள் சேர்ந்த காலத்து சேதனத்தன்மை உண்டாதல் பொருத்தமாயின், அவ்வித நிலையிலேயே சடத்தன்மையும் உண்டாதல் யாங்ஙனம்? பூதங்கள் சேர்ந்த காலத்து சேதனத்தன்மை உண்டாமாயின், அவை பிரிந்த காலத்திலன்ருே சடத்தன்மை யுண்டாதல் வேண்

டும்? அப்படி யல்லாது இருதன்மையும் மாறி மாறிக் காணப்படுவதென்னை? இனிச் சரீரம் சடத்தன்மையாகும் போது சரீரம் பிரிந்து தனித்தனிப் பூதங்களாக வேண்டுமே. அங்ஙனம் காணப்படவில்லையே. ஆனல் சேதனம் சடமாக மாறவில்லை. அது மயக்கமடைந்திருந்ததனுல் ஒன்றும் அறியா திருந்தது என்று ஒரு பொருள் உண்டா? உண்டென்பது உனக்கு உடம்பா டென்று கூறுவாயாகில் அவ்வித மயக்கத்தைச் செய்த பொருள் யாது? அப்படி நீ இதுகாறுங் கூறியவாதம் பொருந்தாதென்க. அன்றியும், நீ எடுத்துக் காட்டிய திருட்டாந்தமும் பொருந்த முடைத்தன்று. எப்படி யெனில், பாக்கினிடத்து வெளிப்படையாய்த் தோன்ருது அடங்கி யிருந்த செந்நிறமே அதனேடு வெற்றிலையும் சுண்ணமுங் கூடி ஒன்ருய காலத்து வெளிப்படையாகத் தோன்றிற்று. இதில் முன்னுள்ளதே தோன்றின தன்றி, முன்னில்லாதது தோன்றவில்லை. இதனுல் பூதங்கள் சேர்ந்த காலத்து முன்னில்லாத சேதனம் தோன்றிற்றென்பது பொருந்தாதென அறிவாயாக.

மா :—தாங்கள் கூறியதொக்கும். ஆனல் விஷயங்களை யறிவது இந்திரியங்களே யாதலாலும், அவை சரீரத்தைப் போலச் சடமல்ல; ஞானேந்திரியமென யாவரும் வழங்குதலாலும் அவையே உயிராதல் அமை யாதோ?

குரு :—அமை யாது. என்னை? மெய், வாய், கண், மூக்கு, செவி, என் னும் ஐம்பொறிகளும் சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்னும் தத்தம் விடயங்களைத் தனித்தனி அறியும் தன்மையுள்ளதன்றி ஒரு பொறி தனக்கு விஷயமாகாத மற்ருெரு புலனை அறியும் தன்மையுள்ளதன்று. அதாவது கண், பொருள்களைப் பார்க்குமே யல்லாது சத்தத்தைக் கேட்கும் தன்மை அதற்கில்லை; அன்றியும் இவ்விதத் தொழிற்பாடுடையோம் யாமென அறியவு மாட்டாது. ஆதலால் அவை ஆன்மாவாதல் அமையா தென்றறிவாயாக.

மா :—தாங்கள் மேற் கூறியபடி இந்திரியங்கள் ஒன்று அறிந்ததை மற்ருென்று அறியாதென்பது உண்மையே யாயினும், ஐந்தும் ஐந்துயிரென அமையு மென்பதனுல் இழுக்கென்னை?

குரு :—உன் கூற்றுப் பொருந்துமாயின், கண், பார்க்கும் போது காது கேளாதிருத்த லென்னை? காது கேட்கும்போது கண் விழித்திருந்தும் பொருள்களை அறியா திருத்தலென்னை? ஐந்தும் ஐந்துயிராகுமெனின், காது கேட்கும்போது கண்ணும் பார்க்கவேண்டுமே. அப்படியில்லாததினுல் அவை தனித்தனி உயிராமாறு மில்லை யென்க. ஆதலால் காதினிடமாக நின்று கேட்டும், அதைவிட்டுக் கண்ணினிடமாகப் பொருந்திப் பார்த்தும், அதை விட்டு மூக்கினிடமாகச் சேர்ந்து முகந்தும், இங்ஙனம் அவ்வைந்தை யுங் கொண்டறிவதாகிய பொருள் வேறு காணப்படுவதால் அதுவே ஆன்மா வென்றறி வாயாக.

மா :—அற்ருயின், ஐம்பொறிகளினிடமாக அறிவது மனமாதிகரணங் களன்ருே? மனம் சங்கர்பித்தவ்ழி இந்திரியங்கள் தொழிற்படலும், அங்

மனம் இல்வழி இந்திரியங்கள் தொழிற் படாதிருத்தலும் கண் கூடாகக் காணப்படுவதால் அந்தக் கரணங்களை ஆன்மா வென்றால் என்னை ?

குரு :—அதுவும் பொருத்தமன்று. என்னை ? அந்தக் கரணங்களாகிய மனம், சித்தம், அகங்காரம், புத்தி யென்னும் நான்கும் ஐம்பொறிகள் போல ஒன்றினை ஒன்று உணரமாட்டா. அன்றியும் மனத்தினால் ஐம்பொறிகளினிடமாக அறியப்பட்ட விஷயங்களை இது யாது, இது எத்தன்மையுடையது என சித்தம் சிந்திக்கும். மனம் அதனை அஃதாமோ அன்றோ என சங்கற்ப விகற்பம் செய்யும். அகங்காரம், அதனை 'இன்னதெனத் துணிவேன்' என ஒருப்பட்டெழுந்து நிற்கும். புத்தி, அதனை இன்னதென நிச்சயித்தறியும். ஆனால் இவைகள், யான் சிந்தித்தேன், யான் சங்கற்பவிகற்பம் செய்தேன், யான் எழுந்தேன், யான் நிச்சயித்தேன் என அறியமாட்டா. ஆகவே, இவை வெவ்வேறுயுணர்தலானும், உணர்ந்தது யாமென்ன உணரமாட்டாதலானும், நான் சிந்தித்தேன், நான் சங்கற்பவிகற்பம் செய்தேன், நான் எழுந்தேன், நான் நிச்சயித்தேன் என்றும் சுகதுக்க ரூபமாய்த் தன்மாட்டு வந்த புத்திதத்துவத்தின் பரிணாமங்களைக் கலாதிகளோடு கூடிநின்று, இது சுகம், இது துக்கம் என அறிந்தும், நான் சுகித்தேன், நான் துக்கித்தேன் என அறியும் பொருள் இவற்றின் வேறுளவாகலால் அதுவே ஆன்மாவாம். அந்தக் கரணங்கள் ஆன்மா அன்று என்று அறிவாயாக.

மா :—சண்டு கூறிய தொக்குமாயினும் பிராணவாயு அடங்குதல் விடுதல் செய்தலாலேயே அறிவு நிகழக்காண்டலானும் பிராணவாயு உடலை விட்டு நீங்கின விடத்துக் கருவிகரணங்கள் தொழிற் படாமையானும், பிராணவாயு உடம்பினிடமாக இயக்கஞ் செய்திருத்தலையே உயிர் இருக்கிறதென்றும், அது உடலைவிட்டு நீங்குதலையே உயிர் போய்விட்டதென்றும் யாவரும் வழங்குதலானும் அதுவே உயிராதல் அமையாதோ ?

குரு:—அன்று. பிராணவாயு இயங்குகின்ற நனவினிடத்துக் கருவி கரணங்கள் தொழிற் படுவதுபோல, பிராணவாயு இயங்குகின்ற நித்திரைக் காலத்து அக்கருவி கரணங்கள் தொழிற்படா திருக்குமாறு என்னை ? பிராணவாயுவே ஆன்மாவாகும் பக்ஷத்தில் அது இயங்குங் காலமெல்லாம் கருவிகரணங்கள் தொழிற்படல் வேண்டுமே. அங்ஙனம் காணுமையால் கருவிகரணங்களைத் தொழிற் படுத்துவது பிராணவாயு அன்றெனப் பெறப் படுதலாலே அவைகளைத் தொழிற்படுத்தி அறியும் பொருள் வேறுண்டெனப் பெறப்படும். அதுவே ஆன்மாவாம்.

மா:—அருள் மிக்குடைய ஐய! யான் இதுகாறும் உயிரெனக் கூறி வந்தனவெல்லாம் சட பதார்த்தங்களே யாதலால், அவை அறிவுடைய உயிராதல் அமையாவென்பதை மகிழ்ச்சியுடன் ஒப்புக் கொள்கிறேன். என்றாலும், தாங்கள் இதுகாறும் கூறியவற்றிற்கு மெய்ஞ்ஞானிகள் பிரமாணம் இருக்கிறதா ?

குரு:—இருக்கிறது. "பாராதிபூதம் நீயல்லை யுன்னிப்பாரிந் திரியங்கள் நீயல்லை, யாராயுணர்வு நீ யென்றான் ஐயன் அன்பாயுரைத்தசொல் ஆனந்தம்

தோழி, சங்கா சங்கரசம்பு'' என்று தாயுமான சுவாமிகள் அருளியதே பெரிதும் பொருத்தமான பிரமாண மென்றறிவாயாக.

மா :— நிரம்பவும் சரியே. தாங்க ளிதுகாறுங் கூறியவாற்றால் ஆன்மாவாகிய பொருள் உடல் கரணம் முதலிய சடப்பொருள்களுக்கு வேறாக ஒன்று உண்டென்று தெரிந்துகொண்டேன். ஆனால், ஆன்மா ஒன்றா பலவா என்பதை அருள்செய்ய வேண்டுகிறேன்.

குரு :—"பசுபலகோடி" என்று நம் திருமூலநாயனார் அருளியபடி ஆன்மாக்கள் எண்ணிறந்தன வென்றறிவாயாக.

மா:— அவ்வான்மாக்களின் இலக்கணங்களையும் பொதுவகையாகச் சிறிது விளக்க வேண்டுகிறேன்.

குரு:— நல்லது. கூறுவாம் கேட்பாயாக. ஆன்மா என்ற சொல்லுக்கே வியாபகமுடையது என்பது பொருளாம். ஆகவே, ஆன்மா வியாபக முடையதாகும். எது வியாபக முடையதோ, அது கட்புலனுக் கெட்டாத சூக்கும சொரூபமுடையதாகலின் ஆன்மா நித்தியப்பொருளாம். இனி, இத்தகைய ஆன்மாவின் மாட்டு அறிவு நிகழக்காண்டலால், ஆன்மா அறிவுடைய பொருளுமாம். இனி அவ்வறிவு பிறவற்றின் துணையாலன்றித்தானே அறியும் தன்மை இன்மையால் சூக்கும அறிவாதலின்றித் தூல அறிவாம் தன்மையுடையதாம். அன்றியும் பளிங்குபோல தன்னால் சாரப்பட்ட பொருளின் தன்மையே தன்தன்மையாகக் கொண்டு நிற்றலால் சார்ந்ததன் வண்ணமாம் இயல்புடையதுமாம். இவ்வியல்பினாலேயே ஆன்மா மலபந்த முறுவதாயிற்று. இம் மலபந்தத்தாலேயே ஆன்மா சிற்றறிவும் சிறுதொழிலும் உடையதாய்ப் பலவகைச் சரீரங்களையெடுத்து வினைகளைச்செய்து வினைப்பயன்களை யநுபவிக்கப் பிறந்திறந்துழலும் தன்மையுடையதாயிற்று. அன்றியும் இவ்வான்மாக்கள் பல பிறவிகளிற் செய்த பசு புண்ணியத்தால் நல்லறிவு விளங்கி சிவபுண்ணியஞ் செய்ய, அப்புண்ணிய மேலீட்டால் சிவனருளைப் பெற்று மலம் நீங்கி நித்தியானந்தத்தை யநுபவிக்கும் தன்மையுடையதென்றும் அறிவாயாக.

மா :—நல்லறிவின் மிக்க நாயகமே! தாங்கள் இதுகாறுங் கூறியவாற்றால் ஆன்மாக்கள் எண்ணிறந்தன வென்றும் அவை உள் பொருள்களென்றும், அவை அறிவு, இச்சை, செயல்களை யுடையனவென்றும், அவைகள் "ஆணவத்தோடத்து விதமானபடி மெய்ஞ்ஞானத்தானுவினோடத்து விதஞ் சாருந்'' தன்மையுடையன வென்றும் விளக்கமாகத் தெரிந்துகொண்டேன். இதனால் யான் தங்கட்குப் பெரிதும் கடப்பாடுடையேன். மெய்கண்ட தேவன் திருவடி வாழ்க.

# நாம் வணங்கும் தெய்வங்கள்

[சு. வி. கனகசபைப் பிள்ளை]

## விநாயகர்

பிரணவப் பொருளாம் பெருந்தகை ஐங்கரன்
சரண அற்புதமலர் தலைக்கணி வோமே.—வெற்றி வேற்கை.

தாய்குறங் கேறித் தந்தை சடையிடை மதுகே தப்பேர்க்
காய்சின அரவென் றஞ்சிக் கடுக்கையுட் புகக்கை நீட்டிப்
பாய்புனல் முகந்து நின்று பழிச்சுநர் வாயி லின்றோர்
வாய்நகை தழைப்ப வீசு மழைமதக் களிற்றைத் தாழ்வாம்.

—சீகாளத்திப் புராணம்.



மேலே காட்டியுள்ள வெற்றிவேற்கைக் காப்புச் செய்யுள் விநாயகர் பிரணவப் பொருள் என ஆன்றோர் ஒப்புக் கொண்டதற்குச் சான்றாகும்; சீகாளத்திப் புராண விநாயக வணக்கச் செய்யுள் அப்பிரணவத்தால் அடையும் பயனைக் காட்டும். இஃது அன்றியும், பிரணவ ஒலிக்குத் தமிழ் வடிவமாகிய ஓம் என்ற எழுத்தின் உருவம் அக்கடவுளர் உருவத்தை ஒத்ததெனச் சிறந்த பெரியார்கள் கூறவும் கேட்டுள்ளோம்.

எந்த மந்திரத்தை உச்சரித்த போதிலும் பிரணவத்தைச் சேர்க்காது உச்சரிப்பதில்லை; எந்த தேவ பூஜை செய்யினும் விநாயகரை வணங்காது செய்வதில்லை. ஏன்? உயிரிலாது உடல் ஆடுமோ, அசையுமோ! சகல ஜீவ ராசிகளிடத்தும் முழுமுதற் கடவுளின் அம்சமாகிய ஓரே உயிர் பல்வேறு உருவங்களாலான உடலில் வியாபித்துத் தொழில் செய்யும்; அவ்வண்ணமே பிரணவமாகிய ஓரே ஒலி பல பேதமுள்ள சப்த ரூபமான மந்திரங்களுடன் கலந்து சக்தி செய்யும். நமது சமயத்தில் மாத்திரமன்றிக் கிறிஸ்தவர் முஸ்லீம்கள் போன்றவர்களும் 'ஆமென்' என்ற மொழியைக்கூட்டித் தங்கள் வேதங்களைப் படிப்பதினின்றும், பிரணவ ஒலியின் பெருமை விளங்கும்.

இந்திரியங்களுக்கு எட்டாத முழுமுதற் கடவுளாகிய சிவம், அல்லது சிவபெருமான், முதலில் ஈன்றது இந்திரியங்களுக்குப் புலப்படத்தக்கதான பிரணவ ஒலியும், அதன் பொருளாம் விநாயகருமாம் என்பது புராதன சாத்திரத் துணிபு. பல ஜீவராசிகளின் கருவில் பிண்டமாகத் தோன்றும் உருவும், தமிழ் 'ஓம்' என்ற எழுத்தின் உருவத்திற்கும், விநாயகரின் உருவத்திற்கும் இணங்கியுள்ளது. இதற்கு இயற்கை, சாக்ஷியமாகுமன்றோ.

இக்கடவுளரின் உருவமோ எவரையும் திகைப்பிக்கத் தக்கதாக உள்ளது. பிறர் நம்மை நகை செய்ய இடந்தருகிறது. அவரது பெரிய வயிறும் யானை முகமும் கூடிய பருத்த தொரு உருவம் வலியற்ற சிறிய தொரு மூஞ்சூறு வாகனத்தின்மேல் உலாவுமாம். ஒன்றுக்கொன்று இசையா இவ்வங்கங்கள் என்ன காரண முடையன?

அப்பணி செஞ்சடை ஆதிபுராதனன்
முப்புரஞ் செற்றனன் என்பர்கள் மூடர்கள்

முப்புர மாவது மும்மல காரியம்
அப்புர மெய்தமை ஆரறிவாரே.—திருமந்திரம்.

இத்திருமந்திர ஆதாரப்படி ஒருவகையில் இக்கடவுளரது ஆதி மூல தத்துவத்தை விசாரித்து அதன் உறுப்புகளையும் விநாயக உருவ அங்கங்களையும் இசைத்துப் பார்ப்பது அறிஞர் கடனாகும். இதைத் தற்கால பௌதிக சாஸ்திர முறையில் கண்ட பேருண்மைகளோடு ஒக்கப் பார்ப்பதே இங்கு நமது நோக்கமாகும்.

தொந்திக்கணபதி எனப்பெயர் பெற்ற இவர் சாப்பிடுவதுயாது? மோதகம்; அது அவர் கையிலும் காணப்படும். அது ஓர் உருண்டை வடிவாவது, யாவரும் அறிவர். இவைகளே அவரது பருத்தவயிற்றில் நிரம்பியுள்ளன.

"அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
அளப்பரும் தன்மை வளப்பெரும் காட்சி
ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்
நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன."

என்ற திருவாசகத் திருவாக்கின்படி அண்டமாகிய முட்டை வடிவான பிரபஞ்ச உருண்டை அளவற்ற உண்டை வடிவான பலபல பூமிபோன்ற கோளங்களை உடையதெனக் காண்க. (இங்கு நமது நண்பர்கள் கவனிக்கத் தக்கது மற்றொன்றுமுளது. அது, நமது பூமியும் உருண்டை வடிவமுள்ளதென்ற உண்மை பழங்காலத்திலேயே அறியப்பட்டதென்பது) இவ்வண்டமே விநாயகரின் தொந்தி. அதன் காரணமாகவே அவர்கை மோதகமும் உண்டை வடிவாகும். இவ்வண்டமே சகல நக்ஷத்திரத் தொகுதிகளைத் தன்னுள் அடக்கிய, விரிந்து பரந்த இடமாகும். (ஆங்கிலத்தில் Space எனப்படுவதும் இதுவே.)

இவ்வண்டம் எவ்வண்ணம் செல்லுகிறது. உயிர் நடைபெறுவதற்கு இன்றி அமையாததான அசைவினால் (ஆங்கிலத்தில் Motion - மோஷன்) காலம் (ஆங்கிலத்தில் Time - டைம்) என்ற அளவையில் செல்லுகிறது.

சகல ஜீவராசிகளும் உயிர் வாழ்வது சுவாச அசைவினாலேயே. இச்சுவாச உறுப்பான மூக்கே யானையில் நீண்டு தும்பிக்கையாக உள்ளது. இதுவே மற்ற ஜீவராசிகளில் இல்லாத சிறப்பு. பிரணவ ஒலி உச்சரிப்பதில் அர்த்த மாத்திரையை நீட்டி உச்சரிப்பதும் இங்கு கவனிக்கத்தக்கது.

இம் முறையில் காலத்திற்கு உபமானமாக எலியைச் சொல்வது சாஸ்திரங்களில் அநேக இடங்களில் காணலாம். இக்காலத்திற்கு அங்கமாகவே எலிவாகனமான மூஞ்சூறு பெருச்சாளி வாகனம் அமைவது ஆகும். எலி எப்படி கொஞ்சம் கொஞ்சமாகச் சுரண்டித் தின்னுமோ அவ்விதமாகக் காலம் கணக்கறியாது கடந்து செல்லும்.

சமீபகாலத்தில் ஈன்ஸ்டன் என்ற மேல்நாட்டு பௌதிக கணித சாஸ்திர நிபுணர் கண்ட பேருண்மையான "ஒன்றை ஒன்று தழுவிய நிலை" பரஸ்பர ஆச்ரயம் (ஆங்கிலம் Relativity - ரிலேடிவிடி) என்ற தத்துவத்தின்படி வெளி, காலம், அசைவு (Space Time and Motion) என்ற மூன்று

பொருளும் அலாதி அலாதியாக நில பெறுதபடி ஒன்றை ஒன்று பிரியாது பற்றித் தழுவி இயங்குகின்ற தென்பதே. இப்பேருண்மையே விநாயகக் கடவுளின் மூலதத்துவம். இம்மூல தத்துவமே சகல சிருஷ்டித் தோற்றத் திற்கும் ஆதி அடிப்படை. ஆதலின் அவ்வியக்தமான சிவத்திவின்றும் தோன்றிய வியக்தமான மூத்தபிள்ளை என்று சொல்லுவதும் பொருத்தமே.

பேருண்மைகளை சகல ஜனங்களும் வெளிப்படையாக அறிந்து வழி படும்படி உருவமாகவும் உருவகமாகவும் காட்டுவது பழைய காலவழக்கு. அவைகளை அலங்காரமின்றி சாமானியமாகக் காரண காரியங்களுடன் விளக்கு வது தற்கால வழக்கு. ஆதலின் அறிவாளர் இருவகையிலும் உணர்ந்து உய் வது காலப்போக்கில் அறிவு வளர்ச்சிக்குப் பொருத்தமும் அவசியமுமாகும்.



# திருஞானசம்பந்தர் பதிக அமைப்பு

(தொடர்ச்சி)

## 2. என் புகலிவேந்தர் தனித்தமிழில் தேவாரம் பாடினர்?

ஆரிய மறையும் தமிழரும் எவ்வித சம்பந்தத்துடனிருந்தாரென்பது ஆளு டைய பிள்ளையாருக்கு நன்ருய்த் தெரியும். மறைப்பதும், மறைந்திருப் பதும், பொருள்படாதிருப்பதும், பொருள்பட்டால், பல்வகைப் பொருளாய் நின்று இதுவோ அதுவோ வென்று மாணவனை மயங்கவைப்பதும் ஆரிய மறைகளின் செய்கை. திருஞானசம்பந்தர் தன் சுவாநுபூதியை வெளியாக்கத் தனித்தமிழ்ச் சொற்களைப்போல் தமிழருக்கு வேறு உணர்த்தும் கருவி யாதுமில்லையென்பது நன்குணர்ந்து, செந்தமிழாலே பாடினரென்பது அவர் சொற்களால் விளங்குகின்றது.

"அந்தண் காழி யருமறை ஞானசம்
பந்தன் பாய்புனல் சூழ்கழிப் பாலையைச்
சிந்தையாற் சொன்ன செந்தமிழ் வல்லவர்
முந்தி வானுல காடன் முறைமையே"

என்றும்,

"நறும் பொழிற் காழியுள் ஞானசம் பந்தன்
பெறும்பத நல்லூர்ப் பெருமணத் தானை
உறும்பொரு ளாற்சொன்ன வொண்டமிழ் வல்லார்க்
கறும் பழி ; பாவம் அவல மிலரே"

என்றும் அவர் திருவாய் மலர்ந்தமை காண்க.

திருஞானசம்பந்தர் பதிகங்களில் உரிச்சொல் காண்பது மிகவும் அரிது. பெரும்பாலும் அவர் மொழிகள் இயற்சொற்களாகவே யிருக்கின்றன. திரி சொற்களெனச் சம்பந்தர் பாடல்களில் காட்டக்கூடியனவும், அக்காலத்தில் உலக வழக்கிலிருந்தனவாகவே அவர் காலத்திய வேறு தமிழாசிரியர்களின் நூற்களாலும் காணப்படுகின்றன. திரிசொற்களாயிருந்த சிலவும், ஒரே பொருள் அவ்வச் சந்தர்ப்பங்களிற் கொடுக்கும் மொழிகளா யிருந்தன

வற்றையே ஆளுடைய பிள்ளையார் உபயோகித்திருக்கின்றனர். மடக்கு முதலிய சித்திரக் கவிகளிலும், சம்பந்தர் பல பொருள் கொடுக்கும் ஒரு மொழிகளை எடுத்தாண்டாரெனினும், அவற்றை உபயோகித்த இடங்களில் ஒரு பொருளுக்கு மேல் இரண்டாம் பொருள் பொருந்த வொட்டாது பாடியிருக்கின்றார். "உறும் பொருளால் சொன்ன ஒண்டமிழ்", தன் தமிழென்றதை உற்று நோக்குக. மாணவர் மயங்க லாகாதென்னும் "சிந்தையாற் சொன்ன தமிழ்" இவர் தமிழாதலால், இதில் வடசொல், திசைச்சொல் வருமாகில், பொருள் இதுவோ, அதுவோ என்று ஐயம் பயக்குமென்பது, புகலி வேந்தர் நன்கறிந்ததாகும். "நலமார் தருஞான சம்பந்தன் சொன்ன, குலமார் தமிழ் கூறுவர் கூர்மையரே" என்றும், அவ்வாறு தனித்தமிழால் பாடுவது மிகவும் கடினமான காரியமாகுமென்பது காட்ட "ஞான சம்பந்தன், செப்பரிய தண்டமிழாற் றெரிந்த பாடல்" என்றும் அவர் திருக்கடைக் காப்புச் செய்யுட்களில் காணலாம். இதற் கேற்றவாறு, அவர் பிறந்த திருப்பதியும், லண்டன் (London) பட்டணம் ஆங்கிலத்திற்கு எவ்வாறோ, அவ்வாறே தமிழுக்காய்ச் சீகாழித் தமிழ், தனித்தமிழாயிருந்ததென்பது, அவர் பதிகத்தில் காணலாம்:—

"சேந்தமிழ் பரப்புறு திருப்புகலி தன்மேல்
அந்தமுத லாகிநடு வாய பெருமானைப்
பந்தனுரை சேந்தமிழ்கள் பத்துமிசை கூர
வந்தவண மேத்துமவர் வானமுடை யாரே."

என்பது நோக்குக.

இவ்வாறு செந்தமிழ், அவர் எடுத்துரைத்த அரிய பெரிய விஷயங்களுக்குக் கூடியவரையில் எளிய நடையி லெழுதினரென்றே நாம் அறிகின்றோம். செந்தமிழே பாடி அவர் கீர்த்திபெற வேண்டுமென்றாவது, அல்லது உலகப்பயன் கருதியாவது அவர் பாடவில்லை. கருணை நிதியாகிய பிள்ளையார், தான் பெற்ற அருட்பெருஞ் செல்வம் எவரும் பெறவேண்டு மென்பதும், அதற்கு அவர் அரிய இனிய தமிழே பயன்படு மென்பதும் அவர் நம்பிக்கை:—

"கழியார் சீரோத மல்கு கடற் காழியுள்
ஒழியாது கோயில் கொண்டானை யுகந் துள்கித்
தழியார் சொன் ஞானசம் பந்தன்றன் தமிழான
மொழிவார் கண் மூவுலகும் பெறு வார்களே"

என்றும்,

"கானலங் கழனி யோதம்வந் துலவுங் கழுமல நகருறைவார்மேல்
ஞானசம் பந்தன் நற்றமிழ்மாலை நன்மையா லுரைசெய்து நவில்வார்
ஊனசம் பந்தத் துறுபிணி நீங்கி யுள்ளழ மொருவழி கொண்டு
வானிடை வாழ்வர் மண்மிசை பிறவார் மற்றிதற் காணையும் நமதே"

என்றும் கூறும் அவர் திருவாக்கா லறியலாம்.

இவ்வாறு தான் கூறும் விஷயங்களை அதிகமாய் வற்புறுத்தாமல், தன் தமிழின்பய னிதுவிது வென்னல், அத்தமிழ் மொழிக்கே ஒருவகைச் சிறப்

புண்டென்று விளக்கும். திருப்பிரமபுரம் - திருச்சக்கரமாற்றுப் பதிகத்தில், "தமிழ்விரகன் மூன்சொன்ன தமிழ்தரிப்போர் தவஞ்செய் தோரே" என்றும் கூறுவதால், தமிழ் மொழி ஒருவகை மந்திர வடிவம் பெற்றதென்றும், "நன்மையா லுரைசெய்பவர்", அதன் நற்பயனைப் பெறுவரென்றும் புகலி வேந்தர் எண்ணியதாகவும் காணப்படுகின்றது. அவர் செந்தமிழ் மொழி மந்திரச் சொரூபமான தென்பது திண்ணம். "ஞானசம்பந்த னணியார், செந்தமிழ்கள் கொண் டினிது செப்பவல தொண்டர் வினை நிற்ப திலவே" என்பதும்,

> "கலவ மஞ்ஞை யுலவுங் கருகாவூர்
> நிலவு பாடலுடை யான்றன நீள்கழல்
> குலவு ஞானசம் பந்தன செந்தமிழ்
> சொலவல் லாரவர் தொல்வினை தீருமே"

என்று மொழிந்ததும் சத்தியமேயாம். ஆகையால் ஆளுடைய பிள்ளையார் தமது திருப்பதிகங்களைத் தனித்தமிழிற் பாடியதற்குக் காரணங்கள் இரண்டென விளங்குகின்றன. அவையாவன:—

(1) தனித் தமிழாயின், அவர் பதிகம் பிற்காலத்தில் கற்க முயல்வோர், பொருள் மயங்கா திருப்பதற்குத் தமிழ் மொழியாயிருப்பது அவசியம். தமிழில் பல பொருள் குறிக்கும் ஒரு தமிழ்க் கிளவிக்கு, நிகண்டு முதலிய அகராதிகளில் பல பொருளிருப்பினும், சம்பந்தர் செய்யுட் பிரயோகத்தில் ஒரு பொருளே பொருந்தும். நமது தமிழ் நிகண்டு (11வது நிகண்டு)

> "நாகம்விண் குரங்கு புன்னை நற்றூசு மலைப்பாம்பானை"

எனில் "நாகம்" என்னும் சொல், சம்பந்தர் உபயோகிக்கு மிடத்தில் இப்பொருள்களில் யாதேனும் ஒன்று அவர் கருத்தாயின், வேறு பொருள் கொள்ள எலாத முறையில் அவர் சொற்றொடர்கள் நிற்கும். ஆதலால் பொருள் எக்காலத்திலும் அவர் பதிகத்திற்கு வெளிப்படையாய்த் திகழ வேண்டுமென்பதே காழியர்கோன் முன்னின்ற கருத்து.

(2) மற்றும், நமது பிள்ளையார் தமிழ் மொழிகளுக்கு உள்ள இனிமை முதலிய சிறப்பு தெரிந்தவர். அம்மொழியின் விஷ எழுத்துக்களை நீக்கி, அமுத எழுத்துக்களைப் பெரும்பாலும் பயன்படுத்திய சொற்களையே அவர் பதிகத்தில் உபயோகிப்பதால், அவர் தமிழ் மந்திர வடிவமாய் நின்று பாவங்களை யொழித்துச் செவிக்கினிதாகி இம்மைக்கும் மறுமைக்கும் பயனளிக்குமென்பதும் அவர் கருத்தாம். இதையே திருவல்லத்தில், அவர் பாடிய,

> "கற்றவர் திருவல்லம் கண்டு சென்று
> நற்றமிழ் ஞானசம் பந்தன் சொன்ன
> குற்றமில் செந்தமிழ் கூற வல்லார்
> பற்றுவ ரீசன் பொற்பா தங்களே"

என்னும் பாசுரமும் விளக்குகின்றது.

# மெய்ப் பொருளின் தன்மை

[P. பொன்னரங்க முதலியார், B. A.]

[14-7-30 பிற்பகல் காபூத் என்னும் ஊரில் உள்ள புரொபசர் ஆல்பர்ட் ஈன்ஸ்டன் என்பவர் இல்லத்தில், ஈன்ஸ்டனுக்கும் கவி-ஸர். ரவீந்திரநாத் தாகூருக்கும் நடந்த சம்பாஷணையின் மொழி பெயர்ப்பு. ஸர் ரவீந்திரநாத் தாகூர் எழுதிய மக்கள் சமயம் என்னும் நூலில் ஓர் அநுபந்தமாக இந்த சம்பாஷணை குறிக்கப்பட்டிருக்கிறது. Note on the "Nature of Reality"—Appendix to "The Religion of Man" by Sir Rabindranath Tagore (pp. 222—225.)

ஈன்ஸ்டன் :—உலகத்திற்குப் புறம்பாய் ஒரு தெய்வத்தன்மையுள்ள பொருள் இருப்பதாக நீங்கள் நம்புகிறீர்களா?

தாகூர் :—அந்தப் பொருள் புறம்பேயில்லை. மனிதனுடைய அகண்டமான உருவமே அண்டத்தில் வியாபித்திருக்கிறது. மனித உருவத்திற்குப் புறம்பாக ஒரு பொருளும் இராது; ஆகவே அண்டத்தில் உள்ள உண்மைப் பொருள் மனிதத் தொடர்புடைய உண்மை யென்பது இதனல் விளங்குகிறது. நான் அறிவியலைச் சேர்ந்த ஒரு விஷயத்தை இதற்கு உதாரணமாய்க் காட்டுகிறேன். (புரோடான்) மூல அணு, (எலக்ட்ரான்) மின்சார அணு என்பவைகளால் சடவஸ்து ஆக்கப்பட்டது; அந்த அணுக்களின் இடையே ஒன்றும் இல்லாமல் இருந்தாலும் அச்சட வஸ்து கன பதார்த்தம் போல் தோன்றும். அதே மாதிரி, மனித சமூகம் தனி நபர்களின் தொகுதியாயினும், மனித உறவு என்னும் தொடர்பு அவர்கள் ஊடே ஊடே உள்ளது. அதனல் ஓர் ஜீவித (ஐக்கியத்துவம்) பலம் பொருந்திய நிலை மனித உலகத்திற்கு உண்டாகின்றது. அண்டம் முழுவதும் அதே மாதிரி நம்முடன் இணைக்கப்பட்டிருக்கிறது; அண்டம் மனிதத் தொடர்புள்ளதாகிறது. இந்தக் கொள்கையை ஓவியத்தின் மூலமாயும், விஞ்ஞான சாத்திரத்தின் மூலமாயும், மனிதனுடைய (பரமார்த்திக உணர்வு) மத சம்பந்தமுள்ள அறிவு மூலமாயும் நிலை நிறுத்த முயன்றிருக்கிறேன்.

ஈ :—அண்டத்தின் தன்மையைப்பற்றி இரண்டு விதமான கொள்கைகள் உண்டு. ஒன்று, மனித சமூகத்திற்கு அடங்கிய ஒருமைப்பட்ட உலகம்; மற்றொன்று, மனித அம்சம் அறவே இல்லாத உண்மைப் பொருளாய் விளங்கும் உலகம்.

தா :—நம்முடைய அண்டம் என்றும் உள்ள மனிதத் தன்மையுடன் ஒத்திருக்கும்போது அதை மெய்ப் பொருள் என்று அறிகிறோம்; அதை அழகுள்ள பொருளாக உணர்கிறோம்.

ஈ :—இக்கொள்கை, முழுவதும் மனித வுணர்வுடனேயே அண்டத்தைப் பார்ப்பதாகும்.

தா :—இதைத் தவிர வேறு எவ்விதக் கொள்கையும் இருக்க முடியாது. இவ்வுலகம் மனிதத் தொடர்புடைய உலகம், விஞ்ஞான சாத்திரத்தின் மூலமாய் அதை அறிவதும் மனித நிலையுள்ள விஞ்ஞானி மூலமாய்த்தான் அறிவதாகும். பகுத்தறிவாலும், சுகம் அனுபவிப்பதாலும் ஏற்படும் ஓர் அளவை

யால் (Standard) அது உண்மையாகத் தோற்றுகிறது ; அந்த அளவையும் நம் அநுபவங்கள் மூலமாய் நித்தியமான மனிதன் பெறும் அநுபவத்தின் அளவையே.

ஈ :—இது மனித நிலைமையை அநுபவமூலமாய் அறிவதாகும்.

தா :—ஆம். ஒரு நித்தியமான நிலையை அது காட்டுகிறது. அதை நாம் நம் உணர்ச்சிகள், செயல்கள் மூலமாய் அறியவேண்டும். தனி நபருக்குள்ள தடைகள் அற்ற பூரண மனிதனை நம் குறுகிய நிலையைக் கொண்டு அநுபவித்து அறிகிறோம். தனி நபர்களுக்குள் அடங்காத வஸ்துவைப் பற்றி விஞ்ஞான சாத்திரம் ஆராய்கிறது ; அது உண்மைகள் நிறைந்ததும் உருவமற்ற மனிதத் தொடர்புள்ளதுமான உலகம் ஆகும் ; சமயமோ அந்த உண்மைகளை அநுபவ பூர்வமாய் அறிந்து அவைகளைக் காட்டினும் ஆழ்ந்த நமது அவசியமான பொருள்களுடன் அவைகளை இணைக்கிறது ; அதனால் உண்மையைப்பற்றி ஒவ்வொரு தனி நபரும் கொண்டுள்ள உணர்வு அண்ட முழுவதிலும் பரந்த ஒரு கருத்தைப் பெறுகிறது. சமயம் உண்மை விஷயத்தில் பல பொருள்களின் பொறுப்பைப் (மதிப்பைப்) பிரயோகித்துப் பார்க்கிறது. நாம் உண்மையை நன்மையாக அறிவது அதனுடன் நமக்குப் பொருத்தம் ஏற்பட்டிருப்பதால்தான்.

ஈ :—ஆகவே, உண்மையாவது, அழகாவது மனிதனுக்குப் புறம்பே யிருக்கமுடியாத ஒரு பொருளா ?

தா :—புறம்பே யிருக்க முடியாததுதான்.

ஈ :—மனிதர்களே இனிமேல் இல்லாமற் போய்விட்டால், பெல்விடியரில் உள்ள அபோலோவின் உருவம் இனிமேல் அழகாக இராதா ?

தா :—இராது.

ஈ :—அழகைப் பொருத்தமட்டும் இந்தக் கொள்கையை நான் அங்கிகரிக்கிறேன் ; ஆனால் உண்மையைப் பொருத்தமட்டும் அதை நான் அங்கிகரிக்க முடியவில்லை.

தா :—ஏன் ? உண்மை என்பதை உணர்வது மனிதன் மூலமாய்த்தானே.

ஈ :—என் கொள்கை சரி என்று நான் நிரூபிக்கமுடியாது ; ஆனால் அது தான் என் மதம்.

தா :—அழகு என்பது எங்கும் உள்ள பொருளோடு முற்றிலும் ஒத்து இருப்பதாகிய குறிக்கோளில் அடங்கி யிருக்கிறது ; உண்மையோ எங்குமுள்ள மனதைப் பூரணமாய் உணர்வதில் அடங்கியிருக்கிறது. தனி நபர்களாகிய நாம், நம்முடைய பிழைகளாலும், தவறுகளாலும், நாம் பல நாளாய் சேகரித்த அநுபவத்தாலும், நம் விளக்கமுற்ற அநுபூதி நிலையினாலும் அதை அணுகுகிறோம். அற்றேல், நாம் எவ்வாறு உண்மையை அறிய இயலும் ?

ஈ :—மனிதனுக்குப் புறம்பாக ஓர் உண்மை சரியாக இருக்கக்கூடும் என்னும் கொள்கையை நான் அறிவியல் மூலமாக நிரூபிக்கமுடியாது ; ஆனால் நான் அதை உறுதியாக நம்புகிறேன். வடிவளவையில் (Geometry) உள்ள பிதாகோரஸுடைய தேர்வு தெரிவிப்பது உண்மையானதொன்று என்பதை நான் நம்புகிறேன் ; அந்த உண்மையை மனிதன் இருப்பது பாதிக்காது. எப்படியும்,மனிதனுக்குப் புறம்பே ஓர் உண்மைப்பொருள் இருக்குமானால், அந்த மெய்ப்பொருளுடன் சம்பந்தமுள்ள ஓர் உண்மையும் உண்டு. அதே மாதிரி முன்னதை மறுத்தல், பின்னதன் உண்மையையும் மறுத்தவாறாகும்

தா :—எங்கும் உள்ள பொருளுடன் இயைந்துள்ள உண்மை என்பது தன் சொரூபத்தில் மனித நிலைமை உடையதாகும்; அன்றேல், தனி நபர்களாகிய நாம் உண்மை என்று உணர்வது எப்போதும் உண்மை என்று சொல்லமுடியாததாகும். இது எல்லாவித உண்மைக்கும் சரியல்ல என்றும், தர்க்கம் மூலமாய் உரைப்பட்டு அறிவியல் மூலமாய் விளக்கப்படும் உண்மையைப் பொருத்தமட்டில் உண்மையே; ஏனெனில், தர்க்கம் என்பது எண்ணங்களால் ஆகிய மனித சம்பந்தமுடைய ஒரு கருவியாக உள்ளது. இந்திய தத்துவ சாத்திரப்படி, பிரமம் என்னும் வாக்கு மனுநீத ஓர் உண்மை உள்ளது. அதைத் தனி மனிதன் மனமும் பற்றுது; வாக்கும் பகரமுடியாது; ஆனல் அதன் அகண்டத்தில் தனி நபர் முழுவதும் கலந்தால் தான் அதை உணர்ந்து அனுபவிக்கலாம். ஆனல் அந்த உண்மை, அறிவியலுக்குச் சம்பந்தப்பட்டதல்ல. நாம் இப்போது பேசும் உண்மையானது ஒரு தோற்றமே; அதாவது, தனி மனிதனுடைய மனதுக்கு உண்மையாகத் தோன்றுவதும், அதனல் மனித சம்பந்தமுள்ளது என்று சொல்லக் கூடியதும், மாயை அல்லது உருவெளி என்று சொல்லக் கூடியதுமான ஒன்று.

ஐ :—ஆகவே, இந்தியர்கள் கொள்கையாகிய உமது கொள்கைப்படி அது தனி மனிதனுடைய மயக்கம் அல்லவென்றும், மனிதத் தொகுதியின் மயக்கம் என்றும் ஏற்படுகிறது.

தா :—அறிவியலில், நம் தனி மனதின் உருவத்தடைகளை நீக்கவேண்டிய நெறியைப் பின்பற்றுகிறோம்; அதனல் அண்டத்திலுள்ள மனிதனுடைய மனதில் உள்ள உண்மையை நாம் அறிய இயலுகிறது.

ஐ :—உண்மை என்பது நம்முடைய உணர்வுக்குப் புறம்பானதா என்பதை யோசிக்கும் போதுதான் தொந்தரவு ஏற்படுகிறது.

தா :—நாம் உண்மை என்று சொல்வது மெய்ப்பொருளின் தடத்த லட்சணத்திற்கும், சொரூப லட்சணத்திற்கும் உள்ள பொருத்தத்தால் ஏற்படுகிறது. அந்தப் பொருத்தம் பகுத்தறிவின் பாற்பட்டது. அந்த லட்சணங்கள் உருவத்திற்கு அதீதமாயுள்ள மனிதனுக்குரியவை.

ஐ :—நம் சாதாரண வாழ்வில் கூட நாம் உபயோகிக்கும் பதார்த்தங்கள் பால் மனிதனுக்குச் சம்பந்தமில்லாத ஓர் உண்மையைக் கற்பிக்கவேண்டியிருக்கிறது. நம்புலன்களின் அனுபவங்களை யுக்திக்குத் தக்கபடி பிணைப்பதற்காக அவ்வாறு செய்யவேண்டியிருக்கிறது. உதாரணமாக, இந்த வீட்டில் ஒருவருமில்லாவிட்டாலும், இந்த மேஜை இப்போது அது இருக்குமிடத்தில் தானே இருக்கும்.

தா :—ஆம். அது தனி மனிதனுடைய மனதுக்குப் புறம்பேயிருக்கும்; ஆனல், அண்டத்திற்குரிய மனதுக்குப் புறம்பேயிராது. நான் காணும் மேஜையை என்னுடைய உணர்வு போன்ற ஒன்றுல்தான் காணமுடியும்.

ஐ :—மனிதனுக்குச் சம்பந்தமில்லாமலே உண்மையானது இருக்கக்கூடும் என்ற என்னுடைய தேசத்தாருடைய கொள்கையை நான் விவரிக்கவாவது, நிரூபிக்கவாவது முடியாது. ஆயினும் ஒவ்வொருவருக்கும் அந்த நம்பிக்கை இல்லாமற் போகாது. அநாகரிகமான மனிதருக்கும் அந்த நம்பிக்கை இருக்கும். மனிதனுக்கு மீறின ஒரு பொருட்டன்மை உண்மைக்கு இருப்பதாக நாம் கூறுகிறோம். நம் வாழ்க்கைக்கும், அனுபவத்திற்கும், மனதிற்கும் புறம்பாக ஓர் உண்மை உண்டு என்கிற அந்த நம்பிக்கை நமக்கு அவசியம். ஆனல் அது எதைக் குறிக்கிறது என்று நாம் சொல்ல முடியாது.

தா :—மேஜை ஒருகனவஸ்துவாக இருப்பதும் தோற்றமேயென்று விஞ்ஞான சாத்திரம் நிரூபித்திருக்கிறது. ஆகவே, மனிதனுடைய மனதிற்கு கோசரமாகும் அந்த மேஜை அந்த மனதில்லாவிட்டால் இராது. ஆனால் பௌதிக விஷயமாய்ப் பார்த்தால், அந்த மேஜை உண்மையில் மின்சார சக்தியுள்ள சுழலும் பல பொருள்களின் தொகுதி என்று உணர்வதுகூட மனிதனுடைய மனதாலேயே என்பதையும் நாம் ஒத்துக்கொள்ளவேண்டும்.

உண்மையைக் கிரகிப்பதில் தனி மனிதனிடம் அடங்கியுள்ள மனதிற்கும், அண்டத்தின் மனதிற்கும் எப்போதும் சச்சரவுண்டு. நம் விஞ்ஞான சாத்திரத்திலும், தத்துவ சாத்திரத்திலும், ஒழுக்க நூலிலும் அவைகளை இணைப்பதாகிய வேலையே என்றும் நிகழ்கிறது. எப்படியாயினும் மனிதனுக்குத் தொடர்பில்லாது அதீதமாய் ஏதாவது ஓர் உண்மை இருந்தால் நம்மைக் குறித்தவரைக்கும் அது ஒரு சிறிதும் இல்லாததுவே யாகும்.

சங்கீதத்தில் கீதங்கள் தொடர்ந்து வருவதுபோல், இடத்தின் விஷயமாய்த் தொடர்தல் இன்றி காலத்தில் மாத்திரம் தொடர்ந்துவரும் விஷயங்களை நாம் யோசிப்பது கஷ்டமல்ல. அப்படிப்பட்ட மனதிற்கு உண்மையைப் பற்றிய அதன் உணர்வு பிதாகோரஸ் என்பவரின் வடிவளவையுடன் தொடர்பில்லாத சங்கீத உண்மையை ஒத்திருக்கும். காகிதம் என்னும் ஒரு பொருள் இருப்பது கலை என்னும் ஒரு பொருள் இருப்பதற்கு மிகவும் வேறானது. காகிதத்தைத் தின்னும் பூச்சியின் மனதிற்குக் கலை என்பது சிறிதும் இல்லாததுபோல்; ஆனால் மனிதனுடைய மனதுக்கோ அந்த காகிதத்தை விட, கலை அதிக மதிப்புள்ளதாகத் தோன்றும். அதே போல, *மனிதனுடைய மனதுடன் புலன்கள் மூலமாய் அல்லது அறிவின் மூலமாய்த் தொடர்பில்லாத ஓர் உண்மை இருந்தால் நாம் மனிதர்களாயுள்ளவரையில் அது ஓர் இன்மைப் பொருளாகவே யிருக்கும்.

ஈ :—ஆகவே நான் உங்களைவிட அதிக மதப்பற்றுள்ளவனே!

தா :—என்மதம் அண்டத்திலுள்ள மனித ஆவியாயும், மனித உருவத்திற்கு அதீதமாயும் உள்ள பொருளை என் சொந்த உயிருடன் சம்பந்தப்படுத்துவது (Cf. "தேனுந்து.......ஜீவன் சிவச் சொரூபம் எனத் தேறி"—திருப்புகழ்). இது "மனிதன் மதம்" என்று நான் மகுடம் சூட்டிய என் இப்பார்ட் சொற்பொழிவுகளின் விஷயமாய் இருந்துளது.

---

## சொற்பொழிவுக் குறிப்புகள்

[ச. சச்சிதானந்தம் பிள்ளை, பி. ஏ., எல். டி.,]

### VII

### சைவசமய சக்தி

1 சொற்றொடர் விளக்கம்: சைவம்=சிவசம்பந்தம். சிவம்=மங்களம். சமயம்=நன்றாக அமைக்கப்பட்ட மார்க்கம்; ஏற்பாடு. சக்தி=ஆற்றல்.

2 பொது நோக்கில் சைவசமய சக்தி செய்வது: (i) மக்களைப் பாசத்தினின்று மீட்டு மென்மேலுயர்த்துச் செல்லல். (ii) உயிர்கள் புண்

---

*மனித நிலக்கு மேற்பட்ட நிலையில் அது புலனாகக்கூடும் என்பது என்னுடைய தாழ்வான அபிப்பிராயம்.

ஊரிய மிகுதியால் போக லோகங்களடைதல். (iii) அவர்கள் உபாசித்த தேவாது சாரூப கதி எய்தல். (iv) இச்சக்தி அன்பை யும், அருளையும், அறிவையும், இன்பையும் படிப்படியாய் ஆன் மாக்களிடம் வளர்த்து வருவது.

3 சிறப்பு நோக்கில் சைவசமய சக்தி செய்வது : (i) சைவங் கொள்ளும் கடவுள் நிலை சால உயர்ந்தது.

" அறுவகைச் சமயத் தோர்க்கும் அவ்வவர் பொருளாய் வேறுங்
குறியது உடைத்தாய் வேதா கமங்களின் குறியி றந்தங்
கறிவினில் அருளால் மன்னி அம்மையோ டப்ப னாகிச்
செறிவொழி யாதுநின்ற சிவனடி சென்னிசேர்ப்பாம்." (சித்தியார்)

(ii) பல நிலையிலுள்ள உயிர்களையும் இச்சக்திபற்றி உதவும் : (அ) உலோக உலகிலுள்ள உயிர்கள் (ஆ) தாவர உலகிலுள்ள உயிர்கள் (இ) பசு பக்ஷியாதி விலங்கு உயிர்கள் (ஈ) மக்கள் (உ) தேவர், நரகர்.

(iii) முத்தியில் பல நிலை : (i) பத முத்திகள் (ii) பரமுத்தி (அ) செடிக்கு முத்தி - உமாபதி சிவனார் முள்ளிச் செடிக்கு முத்திதந்த சரிதை (ஆ) பசு பக்ஷிகட்கு - சிலந்தி, கரிக்குருவி, நாரை, யானை (இ) மனிதர் களில் சிவன்பால் மெய்யன்பு பூண்ட எவரும். தேசம், மொழி, காலம், புறவேடம் இவை தடையன்று. பெரியபுராணத்துள், அப் பாலும் அடிச் சார்ந்தார் புராணமும், சாக்கியநாயனார் புறக் கோல மும் உணரற்பாலன. (ஈ) இந்தியா முழுதும் ஒரு காலத்தில் சை வமே பரவியிருந்தது. (i) பாரத ராமாயணச் சான்றுகள் (ii) மெக் ஸிகோ, வட அமெரிக்கா முதலிய வெளிநாடுகளுலும் சிவ வழிபா டிருந்தமைக்குச் சான்றுகள். ஆகையால், சைவர் நோக்கம் மிகப் பரந்ததாயிருத்தல் முறைமை.

4 தற்காலத்தில் சமய சக்தி குன்றிவரும் தோற்றம் : (i) வெளி நாடுகளில் (அ) கத்தோலிக்கர், மகம்மதியர் நீங்க, மற்ற எல்லா மதத்தின ரிடையும் சமய நாட்டம் குன்றிவருதல் (உ-ம்) ருஷியா சமய அமைப்புகளையும் எண்ணத்தையும் நசுக்கல். பெரிய பாதிரிமார் சமய விஷயத்தில் அலக்ஷியம் பரவுகிறதென்று முறையிடல் (Dean Inge முதலியோர்.)

(ii) இந்தியாவில் : இங்கும் தற்கால நாகரிகத்தைப் பெரிதும் மேற்கொண் டார் வாழ்வில் சமய ஒழுக்கங் குன்றி வரல்.

(iii) ஏனையோர்பால் அறியாமை மிகுதியால் சமயம் விளக்கமுறாமை, சமயம் விபரீதப்பட்டுக் காண்பது.

5 தென்னாட்டில் சைவங் குன்றி வருதலின் காரணம் : (i) அறியாமை - சைவசமய உயர்வையும் விரிவையும் மறந்தமை (ii) நால்வர் பரமா சாரியர்களைச் சைவர் நன்குபற்றித் தொடராமை (iii) ஆதி சைவப் பிராமணர் அசட்டை (iv) திருக்கோயில்களும் சைவ மடங்களும் தம் நிலையில் நில்லாமையால் சைவ சமய போதனை முறையாய்க் கிடைக்காமை (v) பிறமதமும் நாகரிகமும் பரவிவந்து, நல்லறிவு புகட்டப்பெறா மனதில் பற்றிக்கொண்டமை (vi) மிகப் பழைய மரத்தில் புல்லுருவி முளைத்தவியல்பு.

6 மீண்டு மிச்சத்தியை வளர்த்தலின் அவசியம் : (i) மக்களிடையே இப் போது துன்பமும் குழப்பமும் மிக்குள்ளமை (i) ஜன

சமூக நலம் நிலைத்து நின்று ஓங்குதற்குச் சமய வாழ்க்கை வளம் அவசியம். (iii) நம் தனிப்பட்ட வாழ்விற்கும் சமய வாழ்வின் சக்தி அவசியம்.

7 சமய சக்தியை மீட்டும் எழுப்பும் வழி : (i) ஓர் உவமை - நான்கு 'பாயிலர்' கொண்ட எஞ்சினிலிருந்து ஆவி கிளம்பவேண்டும். 'என்சின்' சிவசக்தி. 'பாயிலர்கள்': (i) கோயில்கள் (ii) மடங்கள் (iii) ஆசிரியர்கள் (iv) சபைகள். எஞ்சினுக்கு நிலக்கரி அன்பர் தரும் பொருள். நீர், திருவருள். நெருப்பு சமயப்பற்று. எஞ்சின் செலுத்துவோர் : கோவிலதிகாரிகள், மடாதிபதிகள் ; ஆசிரியர், புலவர் ; சபையினர். எஞ்சினில் கோத்துள்ள வண்டிகள் 64 (சரியையாதி நாற்பாதங்களின் 4×16 உட்பிரிவுகள்). ரயில் தண்டவாளம் : சமய ஒழுக்கம். பிரயாணஞ் செய்வோர் : ஆன்மாக்கள்.

8 எண்ணத்தின் சத்தி :

(i) "உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ளல், மற்றது
தள்ளினும் தள்ளாமை நீர்த்து",

"எண்ணிய தெண்ணியாங் கெய்துவர் எண்ணியர்
திண்ணிய ராகப் பெறின்" (திருவள்ளுவர்)

(ii) உண்மைச் சமய விருத்தியில் ஆர்வம் என்றுங் கொண்டுழைக்க.

(iii) பெண்மக்களுக்கு இக்காட்டமிருப்பின், பெரியோர் வந்து பிறப்பர்.

9 சமயப் பிரசாரஞ் செய்யுமுறை: (i) காலத்திற்குப் பொருத்தமான முறையால் சமயத்தின் முக்கியாம்ஸத்தைப் போதித்தல் (உ-ம்) சிவசின்ன மணிந்தாகவேண்டும் என்று வெறும் விதிகாட்டிப் பயமுறுத்தாது, அவை எவற்றைக் குறிக்கும் சின்னங்கள் என்பதை விளக்கி வற்புறுத்தல்.

(ii) நாகரிக மடைந்துள்ள பொது ஜனங்கட்கு, மகாநாடுகள், பரிசுகள் முதலிய சாதனமும் ஊக்கமும்.

(iii) பெண் மக்கட்குப் பாடசாலைகளிலும், சைவ சபைகளில் தனிக் கூட்டங்களிலும் பொதுக் கூட்டங்களிலும் சமயபோதனை.

(iv) ஏழைமக்கட்கு நால்வர் முதலிய அடியார் சரிதைகளையும், ஆண்டவன் திருவிளையாடல்களில் நல்லறிவுச் சுடர் கொளுவும் தன்மையான சரிதைகளையும் பிரசங்க மூலமாகவும், யந்திர விளக்கு, சினிமா மூலமாகவும், நாடகம் நல்ல படங்கள் வாயிலாகவும் எடுத்தியம்பல்.

(v) (இந்தியாவில் வழங்கும் இந்தி முதலிய முக்கியமான தேச பாஷைகளிலும் ஆங்கிலத்திலும் சைவ நூல் பல வெளியிடல். ஒரு சைவ ஆங்கில மாசிகை வெளியிடல்).

10 சைவ சமய ஏழைகள் பிறமதம் போகாவாறு அன்புத் தொண்டால் அறிவு பரப்பிக் காத்தல்.

11 இந்தியாவின் பிற பாகங்களிலும், வெளிநாடுகளிலும் வசிக்கும் சைவரோடு அளவளாவல்.

12 சைவ சமய சக்தி வளர - ஒவ்வொருவரும் மனம், வாக்கு, பொருள், ஒத்துழைப்பு ஆகியவற்றைத் தரல்.